ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அருளிய

# ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கம்

# श्रीसुब्रह्मण्यभुजङ्गम्

# 𑌶𑍍𑌰𑍀𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌮𑍍



தொகுப்பு:

**சர்மா சாஸ்திரிகள்**

சென்னை

உ

**ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கத்தையும் எனக்கு உபதேசித்த**

**என் குருநாதர் ஸ்ரீ ஸ்ரீ சங்கர ஐயர்**



ஸப்தகோடி - மஹாமந்த்ராச் -
சித்த-விப்ரம்ச்-காரகா: ।
ஏக ஏவ மஹாமந்த்ரோ
குருரித்யக்ஷர-த்வயம் ॥

(நம் சித்தத்தை பிரமிக்க வைக்கும் ஏழுகோடி மஹாமந்திரங்களுக்கு
இணையானது குரு என்ற இரண்டு அக்ஷர மந்திரம். )

श्री शङ्कर भगवत्पादाचार्य परम्परागत मूलाम्नाय सर्वज्ञ पीठम्

श्री काञ्ची कामकोटि पीठम्



ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்ய பரம்பராகத மூலாம்நாய ஸர்வஜ்ஞ பீடம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்

# ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கம்

## ॥श्रीसुब्रह्मण्यभुजङ्गम्॥

𑌶𑍍𑌰𑍀𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌮𑍍

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அருளியது

தொகுப்பு

சர்மா சாஸ்திரிகள்

சென்னை

முதல் பதிப்பு : 22.10.2015 (விஜயதசமி)
இரண்டாம் பதிப்பு : 17.11.2015 (ஸ்கந்த சஷ்டி)
மூன்றாம் பதிப்பு : 27-11-2016

விலை : ரூ. 40/-

**வெளியிடுவோர் :**
**லோகக்ஷேம சேவா சமிதி**
சென்னை.

**பிரதிகள் கிடைக்குமிடம்**

**சர்மா சாஸ்திரிகள்**
சென்னை.
போன்: 9444380973

அச்சிட்டோர் :

**ஆர் மீடியா**
சென்னை.
போன்: 9884886240

# மூன்றாவது பதிப்பின் முகவுரை

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் திருச்செந்தூர் சுப்ரஹ்மண்ய ஸ்வாமி சந்நிதியில் இயற்றிய இந்த 'சுப்ரஹ்மண்ய புஜங்கம்' மிகவும் சக்தி வாய்ந்தது.

33 ஸ்லோகங்களை தன்னகத்தே கொண்டுள்ளது இந்த சுப்ரஹ்மண்ய புஜங்கம்.

ஸ்காந்த புராணத்தில் உள்ள பல நுட்பமான விஷயங்களை ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கத்தில் ஆங்காங்கு நாம் காணலாம். இதில் பல வேதாந்த நுட்பங்கள் அடங்கியுள்ளது. பக்தியினால் பகவத் ஸாயுஜ்யத்தைப் பெறமுடியும் என்பது இதன் இறுதி கருத்தாகும்..

இதை குருமுகமாக கற்றுக்கொண்டு தினமும் பாராயணம் செய்வது மிகவும் ஸ்லாக்யம். கற்றுக்கொள்ளுவது மிகவும் சுலபம்.

ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்க ஸ்லோகங்கள் இந்தச் சிறிய புத்தகத்தில் சம்ஸ்கிருதம், கிரந்தம் மற்றும் தமிழில் அளிக்கப்பட்டு இருப்பதுடன் அதன் தமிழாக்கமும் பொருளும் அளிக்கப்பட்டுள்ளது.

சுப்ரஹ்மண்ய புஜங்கத்தை மனமுருக பாராயணம் செய்வோருக்கு திருச்செந்திலாண்டவன் அருளால் ஆரோக்யம், தீராத பிரச்னகளுக்குத் தீர்வு, மன நிம்மதி கிடைப்பது நிச்சயம்.

ஸ்ரீ ஸ்ரீ காஞ்சி ஆச்சார்யாள் அவர்கள் இந்த ஸ்லோகத்தை பற்றியும் அதன் உட்கருத்தைப் பற்றியும் எடுத்துச் சொல்லியுள்ளார்கள். இதைப் படிக்கும்படி பல சிஷ்யர்களுக்கு உபதேசமும் செய்திருக்கிறார்கள்.

ஆச்சார்யாள் அனுக்ரஹத்தால் இந்த நூல் பதிப்பிக்கப்படுகின்றது.

இதை எல்லோரும் பக்திபெருக்குடன் படித்து ஜன்மாவின் லக்ஷியத்தைப் பெறவேண்டுமென வள்ளி தேவஸேனா சமேத ஸ்ரீ சுப்ரஹ்மண்ய ஸ்வாமியைப் பிரார்த்திக்கின்றேன்.

குருவருளும் திருவருளும் எல்லோருக்கும் கிடைக்கட்டும்

அன்புடன்
சர்மா சாஸ்திரிகள்

சென்னை
27 11 2016

## ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கம்

# ॥ श्री सुब्रह्मण्य भुजङ्गम् ॥

सदा बालरूपाऽपि विघ्नाद्रिहन्त्री
महादन्तिवक्त्राऽपि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे
विधत्तां श्रियं काऽपि कल्याणमूर्तिः ॥ १ ॥

𑌸𑌦𑌾 𑌬𑌾𑌲𑌰𑍂𑌪𑌾𑌽𑌪𑌿 𑌵𑌿𑌘𑍍𑌨𑌾𑌦𑍍𑌰𑌿𑌹𑌂𑌤𑍍𑌰𑍀
𑌮𑌹𑌾𑌦𑌨𑍍𑌤𑌿𑌵𑌕𑍍𑌰𑌾𑌪𑌿 𑌪𑌂𑌚𑌾𑌸𑍍𑌯𑌮𑌾𑌨𑍍𑌯𑌾।
𑌵𑌿𑌧𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌮𑍃𑌗𑍍𑌯𑌾 𑌗𑌣𑍇𑌶𑌾𑌭𑌿𑌧𑌾 𑌮𑍇
𑌵𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌕𑌾𑌪𑌿 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃

1. ஸதா பாலரூபாபி விக்நாத்ரி ஹந்த்ரீ
மஹாதந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா
விதீந்த்ராதி ம்ருக்யா கணேஸாபிதா மே
விதத்தாம் ஸ்ரியம் காபி கல்யாண மூர்த்தி:

**என்றும் பாலரூபன் எனினும் இடர்கள் மலை தகர்ப்பவன்
அன்றி யானை முகவன் எனினும் அரிகள் போற்றும் எழில் உளான்
நன்று பிரம்மன் இந்திரன் முதலோர் நாடும் நற் கணேசனாம்
என்றும் மங்களங்கொள் மூர்த்தி திருவெனக் களிக்கவே.**

எப்பொழுதும் குழந்தையாகவே இருந்தாலும் மலை போன்ற விக்னங்களைப் பொடியாகச் செய்யும் சக்தியுள்ளவராயும் யானையின் முகத்தோடு கூடினவரானாலும் சிங்கங்களாலும் பூஜிக்கத் தகுந்தவராயும் பிரம்மா, இந்திரன் முதலான தேவர்களாலும் தங்களுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு தேடத்தகுந்தவராயும் கணேசன் என்ற பெயர் உள்ளவராயும் இருக்கும் அளவற்ற மகிமையோடு கூடிய எப்பொழுதும் மங்களமூர்த்தியாக விளங்கும் பரம புருஷனான விநாயகர் எனக்கு ஐஸ்வர்யத்தைக் கொடுக்கட்டும்.

न जानामि शब्दं न जानामि चार्थं
न जानामि पद्यं न जानामि गद्यम्।
चिदेका षडास्य हृदि द्योतते मे
मुखान्निःसरन्ते गिरश्चापि चित्रम्॥ २॥

𑌨 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌶𑌬𑍍𑌦𑌂 𑌨 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌚𑌾𑌰𑍍𑌥𑌂
𑌨 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌪𑌦𑍍𑌯𑌂 𑌨 𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 𑌗𑌦𑍍𑌯𑌮𑍍
𑌚𑌿𑌦𑍇𑌕𑌾 𑌷𑌡𑌾𑌸𑍍𑌯 𑌹𑍃𑌦𑌿 𑌦𑍍𑌯𑍋𑌤𑌤𑍇 𑌮𑍇
𑌮𑍁𑌖𑌾𑌨𑍍𑌨𑌿𑌃𑌸𑌰𑌨𑍍𑌤𑍇 𑌗𑌿𑌰𑌶𑍍𑌚𑌾𑌪𑌿 𑌚𑌿𑌤𑍍𑌰𑌮𑍍।

2. ந ஜாநாமி ஸப்தம் ந ஜாநாமி சார்த்தம்
ந ஜாநாமி பத்யம் ந ஜாநாமி கத்யம்
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந் நிஸ்ஸரந்தே கிரஸ்சாபி சித்ரம்

**ஸப்தமொன்றும் அறிகிலேன் நான் அர்த்தமொன்றும் அறிகிலேன்**
**கத்தியங்கள் அறிகிலேன் நான் பத்தியங்கள் அறிகிலேன்**
**சித்திலாறு முகங்களோடு ஜோதி ஒன்று திகழ்வதால்**
**மெத்தவென் முகத்தினின்று சித்ரவாக்கிலங்குதே**

நான் சப்தம் (வாக்கு) அறிந்தவன் அல்ல, பொருளும் அறிந்தவன் அல்ல, ஸ்லோகத்தையும் அறிந்தவன் அல்ல, சூர்ணிகையையும் அறிந்தவன் அல்ல, என்னுடைய ஹ்ருதயத்தில் ஆறுமுகத்தோடு கூடின ஒரு ஒளியானது பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அதனால் என்னுடைய முகத்தினின்றும் அதிசயமான வாக்விலாசங்களும் வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

मयूराधिरूढं महावाक्यगूढं
मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महीदेवदेवं महावेदभावं
महादेववालं भजे लोकपालम् ॥ ३ ॥

𑌮𑌯𑍂𑌰𑌾𑌧𑌿𑌰𑍂𑌢𑌂 𑌮𑌹𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌗𑍂𑌢𑌂
𑌮𑌨𑍋𑌹𑌾𑌰𑌿𑌦𑍇𑌹𑌂 𑌮𑌹𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌗𑍇𑌹𑌮𑍍 ।
𑌮𑌹𑍀𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌂 𑌮𑌹𑌾𑌵𑍇𑌦𑌭𑌾𑌵𑌂
𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌬𑌾𑌲𑌂 𑌭𑌜𑍇 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌮𑍍 ।

3. மயூராதிரூடம் மஹாவாக்யகூடம்
மநோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம்
மஹீதேவதேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம்

**மயிலின் மீது ஏறும் எழிலன் மறைகள் வாக்யப் பொருளனாம்**
**ஒயில் கண்டார் உளம் கவர்ந்தோர் உன்னும் முனிவர் உளவுளான்**
**பயிலும் வேதியர் துதிக்கும் வேதம் ஓதும் பொருளுமாம்**
**கயிலை ஈசன் மதலை லோகம் காக்கும் குகனைப் போற்றுவேன்.**

மயில் வாகனனாயும், மகா வாக்கியத்தின் பொருளாகவும், காண்பவர்கள் மனத்தை காந்தம் போல் கவர்ந்திழுக்கும் தேக காந்தியுடன் கூடினவராயும், மகான்களின் மனத்தில் குடி கொண்டவரும், எல்லோரும் உபாசிக்கத் தகுந்தவரும், வேதங்களின் மகா தாத்பர்யத்திற்கு விஷயமாயும் பரமேஸ்வரனுடைய புத்திரனுமான சுப்ரமண்யக் கடவுளைப் போற்றுகின்றேன்.

यदा संनिधानं गता मानवा मे
भवाम्भोधिपारं गतास्ते तदैव ।
इति व्यञ्जयन्सिन्धुतीरे य आस्ते
तमीडे पवित्रं पराशक्तिपुत्रम् ॥ ४ ॥

𑌯𑌦𑌾 𑌸𑌂𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 𑌗𑌤𑌾 𑌮𑌾𑌨𑌵𑌾 𑌮𑍇
𑌭𑌵𑌾𑌮𑍍𑌭𑍋𑌧𑌿𑌪𑌾𑌰𑌂 𑌗𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌤𑌦𑍈𑌵 ।
𑌇𑌤𑌿 𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌯𑌨𑍍𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌤𑍀𑌰𑍇 𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇
𑌤𑌮𑍀𑌡𑍇 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑍁𑌤𑍍𑌰𑌮𑍍 ॥

4. யதா ஸந்நிதாநம் கதா மாநவா மே
பவாம் போதி பாரம் கதாஸ்தே ததைவ
இதி வ்யஞ்ஜயந் ஸிந்துதீரே ய ஆஸ்தே
தமீடே பவித்ரம் பராஸக்தி புத்ரம்

**என்று மனிதர் இங்கு எந்தன் சன்னதிக்கு வருவரோ**
**அன்று மாபவக் கடல்தன் அக்கரைக்கும் ஏகுவார்**
**என்றவாறு கடலின் ஓரம் நின்ற தூய தெய்வமாம்**
**நன்று ஞான சக்தி ஈன்ற பாலனை நிதம் போற்றுவேன்.**

எப்பொழுது மனிதர்கள் என் சந்நதியை வந்தடைந்தவார்களோ அவர்கள் அப்பொழுதே சம்சாரக் கடலில் இருந்து விடுபட்டவர்கள் ஆகிறார்கள். இப்படி சமிக்ஞையாக செய்து கொண்டு சமுத்திரக் கரையோரம் எந்த பகவான் பூரண சாந்நியத்துடன் விளங்குகிறாரோ, அப்பேர்பட்டவரும், பரிசுத்தமானவரும், பராசக்தியின் புத்திரருமான சுப்ரமண்யக் கடவுளைப் போற்றுகின்றேன்.

यथाब्धेस्तरङ्गा लयं यन्ति तुङ्गा-
स्तथैवापदः सन्निधौ सेवतां मे ।
इतीवोर्मिपंक्तीर्नृणां दर्शयन्तं
सदा भावये हृत्सरोजे गुहं तम् ॥ ५ ॥

5. யதாப்தேஸ் தரங்கா லயம் யாந்தி துங்கா:
தைதைவாபத: ஸந்நிதௌ ஸேவதாம் மே
இதீவோர்மி பங்க்தீர் ந்ருணாம் தர்ஸயந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குஹம் தம்

**நன்றெழுந்த திரைகள் என்முன் நாசமுற்றடங்கல் போல்**
**இன்றும் உங்கள் இடர்கள் யாவும் ஏகி நாசமடையுமே**
**என்று கூறி அலைகள் காட்டி நிற்கும் அந்த குகனையான்**
**என்றும் எந்தன் உள்ளக்கமலம் இட்டுத்தியானம் செய்குவேன்.**

எப்படி சமுத்திரத்தில் உயர்ந்த அலைகள் கரையில் அடிப்பதால் நாசமடைகின்றதோ (இல்லாமல் போகின்றதோ) அதுபோல என்னைத் தரிசனம் செய்யும் எல்லோருடைய ஆபத்துக்களும், சகல வியாதிகளும் என் சந்நிதியில் என்னில் லயமாகிறது என்று அலைகளைக் காண்பிப்பது போல் பரிசுத்தமான எல்லோருடைய ஹ்ருதயத்திலும் வசிக்கின்றவருமான முருகனை சுப்ரமணியக் கடவுளை எனது ஹ்ருதய கமலத்தில் வைத்து தியானம் செய்கின்றேன்.

गिरौ मन्निवासे नरा येऽधिरूढा-
स्तदा पर्वते राजते तेऽधिरूढाः ।
इतीव ब्रुवन्गन्धशैलाधिरूढः
स देवो मुदे मे सदा षण्मुखोऽस्तु ॥ ६ ॥

𑌗𑌿𑌰𑍌 𑌮𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸𑍇 𑌨𑌰𑌾 𑌯𑍇𑌽𑌧𑌿𑌰𑍂𑌢𑌾-
𑌸𑍍𑌤𑌦𑌾 𑌪𑌰𑍍𑌵𑌤𑍇 𑌰𑌾𑌜𑌤𑍇 𑌤𑍇𑌽𑌧𑌿𑌰𑍂𑌢𑌾𑌃 ।
𑌇𑌤𑍀𑌵 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌗𑌨𑍍𑌧𑌶𑍈𑌲𑌾𑌧𑌿𑌰𑍂𑌢𑌃
𑌸 𑌦𑍇𑌵𑍋 𑌮𑍁𑌦𑍇 𑌮𑍇 𑌸𑌦𑌾 𑌷𑌣𑍍𑌮𑍁𑌖𑍋𑌽𑌸𑍍𑌤𑍁

6. கிரௌ மந்நிவாஸே நரா யேதிரூடா:
ததா பர்வதே ராஜதே தேதிரூடா:
இதீவ ப்ருவன் கந்த ஸைலா தேதிரூட:
ஸ தேவோ முதேமே ஸதா ஷண்முகோஸ்து

**எந்த மனிதர் யான் வசிக்கும் இம்மலைக்கு வருவரோ**
**அந்த அன்பர் கயிலை வந்தோர் ஆவர் என்ற வாருமே**
**கந்தமாதனத்தின் மீது காணும் அந்த ஷண்முகன்**
**அந்தமாய் என் சிந்தையுள் களிக்க நின்றிலங்கவே.**

எவரொருவர் நான் வசிக்கும் இடமான மலையில் ஏறி வருகிறார்களோ, அவர்கள் அப்பொழுதே கைலாசத்தில் ஏறி வாசம் செய்யும் தகுதியடைகிறார்கள் என்று சொல்லுவது போல் கந்தமாதன பர்வதத்தின் மேல் விளங்குகின்ற ஆறு முகத்தோடு கூடிய சுப்ரமண்யச் சுவாமியானவர் என்னில் எப்பொழுதும் ப்ரீதி உள்ளவராக இருக்கட்டும்.

महाम्भोधितीरे महापापचोरे
मुनीन्द्रानुकूले सुगन्धाख्यशैले ।
गुहायां वसन्तं स्वभासा लसन्तं
जनार्तिं हरन्तं श्रयामो गुहं तम् ॥ ७ ॥

𑌮𑌹𑌾𑌮𑍍𑌭𑍋𑌧𑌿𑌤𑍀𑌰𑍇 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑌚𑍋𑌰𑍇
𑌮𑍁𑌨𑍀𑌂𑌦𑍍𑌰𑌾𑌨𑍁𑌕𑍂𑌲𑍇 𑌸𑍁𑌗𑌂𑌧𑌾𑌖𑍍𑌯𑌶𑍈𑌲𑍇
𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂 𑌵𑌸𑌨𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌸𑌾 𑌲𑌸𑌨𑍍𑌤𑌂
𑌜𑌨𑌾𑌰𑍍𑌤𑌿𑌂 𑌹𑌰𑌨𑍍𑌤𑌂 𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑍋 𑌗𑍁𑌹𑌂 𑌤𑌂 ॥

7. மஹாம்போதிதீரே மஹாபாபசோரே
முநீந்த்ராநுகூலே ஸுகந்தாக்யஸைலே
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா லஸந்தம்
ஜநார்த்திம் ஹரந்தம் ஸ்ரயாமோ குஹம்தம்

**அந்தமா கடற்கரைதனில் பஞ்சபாதகம் தவிர்த்து**
**அந்தமாக முனிவர்நாடும் சுகந்த பர்வதத்திலே**
**சொந்த ஜோதியால் திகழ்ந்தென் தூய உள்ளத்துறைபவன்**
**வந்த அன்பர் ஆர்த்தி தீர்க்கும் அந்த குகனை அடைகுவேன்.**

மஹோததி என்ற சமுத்திரக் கரையில் விளங்குபவராயும் பஞ்சமஹா பாதகங்களை நாசம் செய்பவராயும் தபஸ் செய்யும் முனிவர்களுக்கு யோக்கியமாயும், சுகந்த பர்வதத்தில் குகைக்குள் வாசம் செய்பவராயும் தன்னுடைய ஜ்யோதிஸ்ஸினாலேயே பிராணிகளுக்கு பீடை யாவையையும் இல்லாது செய்பவராயும் இருக்கின்ற அந்த குஹனை சுப்ரமண்ய சுவாமியைப் போற்றுகின்றேன்.

लसत्स्वर्णगेहे नृणां कामदोहे
सुमस्तोमसंछन्नमाणिक्यमञ्चे ।
समुद्यत्सहस्रार्कतुल्यप्रकाशं
सदा भावये कार्तिकेयं सुरेशम् ॥ ८ ॥

𑌲𑌸𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍍𑌣𑌗𑍇𑌹𑍇 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌕𑌾𑌮𑌦𑍋𑌹𑍇
𑌸𑍁𑌮𑌸𑍍𑌤𑍋𑌮𑌸𑌂𑌛𑌨𑍍𑌨𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌮𑌞𑍍𑌚𑍇 ।
𑌸𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑍍𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌰𑍍𑌕𑌤𑍁𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂
𑌸𑌦𑌾 𑌭𑌾𑌵𑌯𑍇 𑌕𑌾𑌰𑍍𑌤𑌿𑌕𑍇𑌯𑌂 𑌸𑍁𑌰𑍇𑌶𑌮𑍍 ॥

8. லஸத் ஸ்வர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோம ஸஞ்சந்ந மாணிக்யமஞ்சே
ஸமுத்யத் ஸஹஸ்ரார்க்க துல்யப்ரகாஸம்
ஸதா பாவயே கார்த்திகேயம் ஸுரேஸம்

**தங்கபள்ளியறையில் நரர்க்கு மங்களங்கள் பொழிவதாம்**
**நன்கு வாசமலர் திகழ்ந்த மாணிக்கப் பொற்கட்டிலில்**
**அங்கு ஆயிரம் கதிர்போல் அரிய ஜோதி வீசிய**
**புங்கவர்களின் ஈசன் கார்த்திகேயனை தினம் உன்னுவேன்.**

தங்கமயமான பள்ளியறையில் மனிதர்களுக்கு இஷ்ட வரங்களைத் தருபவராயும், நல்ல வாசனைப் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பொற்கட்டிலின்மேல் ஆயிரம் சூரியனுக்குச் சமமாக பிரகாசிக்கக் கூடியவராயும் தேவாதி தேவனுமாய் கிருத்திகை நட்சத்திரப் பெண்களால் பாலூட்டப் பெற்றவனாயும் விளங்கும் கார்த்திகேயனை சுப்ரமண்யக் கடவுளை எப்பொழுதும் தியானம் செய்கின்றேன்.

रणद्धंसके मञ्जुलेऽत्यन्तशोणे
मनोहारिलावण्यपीयूषपूर्णे ।
मनःषट्पदो मे भवक्लेशतप्तः
सदा मोदतां स्कन्द ते पादपद्मे ॥ ९ ॥

𑌰𑌣𑌦𑍍𑌧𑌂𑌸𑌕𑍇 𑌮𑌞𑍍𑌜𑍁𑌲𑍇𑌽𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌶𑍋𑌣𑍇
𑌮𑌨𑍋𑌹𑌾𑌰𑌿𑌲𑌾𑌵𑌣𑍍𑌯𑌪𑍀𑌯𑍂𑌷𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 ।
𑌮𑌨𑌃𑌷𑌟𑍍𑌪𑌦𑍋 𑌮𑍇 𑌭𑌵𑌕𑍍𑌲𑍇𑌶𑌤𑌪𑍍𑌤𑌃
𑌸𑌦𑌾 𑌮𑍋𑌦𑌤𑌾𑌂 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦 𑌤𑍇 𑌪𑌾𑌦𑌪𑌦𑍍𑌮𑍇 ॥

9. ரணத்ஹம்ஸகே மஞ்ஜுலேத்யந்த ஸோணே
மநோஹாரி லாவண்ய பியூஷபூர்ணே
மந: ஷட்பதோ மே பவக்லேஸ தப்த:
ஸதா மோததாம் ஸ்கந்த தே பாதபத்மே

**சந்தித்த இரு அன்னம் போலும் சாலவும் சிறந்ததாம்**
**சிந்தை கவரும் எழிலின் அமிர்த சீர்நிறைந்த அழகுடன்**
**வந்த உந்தன் பாத பங்கஜங்கள் மீதில் கந்தனே**
**தொந்தமுறும் என் சிந்தை என்ற வண்டும் ஏகி மகிழவே.**

ஹம்சங்களின் ஓசையோடு கூடியதாயும் சிவப்பு வர்ணம் உள்ளதாயும் மனத்தைக் கவரும் லாவண்ய அம்ருதம் நிறைந்ததாயும் அழகாயும் உள்ள உந்தன் பாத கமலங்களில் சம்சார தாபத்தால் பலவிதமான துன்பங்களுக்கு உட்பட்ட என் மனமாகிய வண்டு உனது தேனான பாதாரவிந்தங்களை என்றும் நோக்கியே சஞ்சரித்து ஆனந்திக்கும்படி அருள் புரிவாயாக.

सुवर्णाभदिव्याम्बरैर्भासमानां
क्वणत्किङ्किणीमेखलाशोभमानाम् ।
लसद्धेमपट्टेन विद्योतमानां
कटिं भावये स्कन्द ते दीप्यमानाम् ॥ १०

𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌾𑌭𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑍈𑌰𑍍𑌭𑌾𑌸𑌮𑌾𑌨𑌾𑌂
𑌕𑍍𑌵𑌣𑌤𑍍𑌕𑌿𑌙𑍍𑌕𑌿𑌣𑍀𑌮𑍇𑌖𑌲𑌾𑌶𑍋𑌭𑌮𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌲𑌸𑌦𑍍𑌧𑍇𑌮𑌪𑌟𑍍𑌟𑍇𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑍋𑌤𑌮𑌾𑌨𑌾𑌂
𑌕𑌟𑌿𑌂 𑌭𑌾𑌵𑌯𑍇 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦 𑌤𑍇 𑌦𑍀𑌪𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌮𑍍 ॥

10. ஸுவர்ணாப திவ்யாம்பரைர் பாஸமாநாம்
க்வணத் கிங்கிணீ மேகலா ஸோபமாநாம்
லஸத்தேம பட்டேந வித்யோதமாநாம்
கடிம் பாவயே ஸ்கந்த தே தீப்யமாநாம்

**பொன்னின் ஆடை மின்மின்எனவே பூண்டிலங்கும் இடையினில்
மின்னும் கிண்கிணிச் சலங்கை சப்தமிட்டு இலங்கவே
இன்னும் ஒலிக்கும் பட்டமோடு இயற்கையாய் ஜொலிக்கும் முன்
ஸ்வர்ண இடையின் எழிலை யானும் உன்னுவேன் என் கந்தனே.**

ஹே சுப்ரமண்யக் கடவுளே! பொன் வண்ண (மஞ்சள்) வஸ்த்ரங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகிறதாயும் இனிமையான ஓசையைக் கொடுக்கும் சலங்கைகளோடு கூடின கடிசூத்ரத்தால் பிரகாசிக்கின்றதாயும் வஸ்த்ரத்திற்கு மேல் பாஸிக்கிற தங்க மயமான பட்டத்தால் பாஸிக்கின்றதாயும் இந்த அலங்காரங்கள் யாதொன்றுமில்லாமலேயே ஸ்வயமாகவே பாஸிக்கும் சுபாவமுள்ள உன்னுடைய தெ;ய்வீகமான இடுப்பு பிரதேசத்தை நான் தியானம் செய்கின்றேன்.

पुलिन्देशकन्याघनाभोगतुङ्ग-
स्तनालिङ्गनासक्तकाश्मीररागम् ।
नमस्यामहं तारकारे तवोरः
स्वभक्तावने सर्वदा सानुरागम् ॥ ११ ॥

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

11. புலிந்தேஸ கந்யா கநாபோக துங்க
ஸ்தநாலிங்கநா ஸக்த காஸ்மீர ராகம்
நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவநே ஸர்வதா ஸாநுராகம்

**ஆறணங்கு வேடர் மங்கையோடு அணைந்த போதவள்**
**பார குங்குமத்தனங்கள் பட்டுமே சிவந்ததும்**
**ஆர்வமோடு எக்காலும் அன்பர் காக்கவும் சிவந்த உன்**
**மார்பையான் வணங்கினேன் அத்தாரகன் பகைவனே.**

தாரகாசுரனை சம்ஹாரம் செய்த ஹே சுப்ரமண்யக் கடவுளே! வேடனுடைய பெண்ணாகிய வள்ளி என்னும் தன் பத்தினியின் மிருதுவாயும் பெரியதாயும் பெருமையாகவும் இருக்கும் இரண்டு ஸ்தனங்களையும் ஆலிங்கனம் செய்து கொள்ளும் காரணத்தால் அந்த ஸ்தனங்களில் அலங்கரிக்கப்பட்டுள்ள குங்குமம் தன் மார்பினில் பட்ட காரணத்தால் சிவப்பு வர்ணத்தோடு கூடினதாய் இருக்கின்றது. தனது பக்தர்களை எப்பொழுதும் ரக்ஷிக்கும் பொருட்டு உன் மனத்தில் ஏற்படும் ஆசையினால் மேற்கூறிய நிறத்தை அடையக்கூடிய உன் மார்பினை நான் எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றேன்.

विधौ क्लृप्तदण्डान् स्वलीलाधृताण्डा-
न्निरस्तेभशुण्डान् द्विषत्कालदण्डान् ।
हतेन्द्रारिषण्डाञ्जगत्राणशौण्डान्
सदा ते प्रचण्डान् श्रये बाहुदण्डान् ॥

𑌵𑌿𑌧𑍌 𑌕𑍍𑌲𑍃𑌪𑍍𑌤𑌦𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 𑌸𑍍𑌵𑌲𑍀𑌲𑌾𑌧𑍃𑌤𑌾𑌣𑍍𑌡𑌾𑌨𑍍
𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑍇𑌭𑌶𑍁𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑍍𑌕𑌾𑌲𑌦𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 ।
𑌹𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌰𑌿𑌷𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 𑌜𑌗𑌤𑍍𑌰𑌾𑌣𑌶𑍌𑌣𑍍𑌡𑌾𑌨𑍍
𑌸𑌦𑌾 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌚𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑌯𑍇 𑌬𑌾𑌹𑍁𑌦𑌣𑍍𑌡𑌾𑌨𑍍 ॥ ௧௨ ॥

12. விதௌ க்லுப்த தண்டாந் ஸ்வலீலா த்ருதாண்டாந்
நிரஸ்தேப ஶுண்டாந் த்விஷத்கால தண்டாந்
ஹதேந்த்ராரி ஷண்டாந் ஜகத்ராண ஶௌண்டாந்
ஸ்ததா தே ப்ரசண்டாந் ஸ்ரயே பாஹுதண்டாந்

**அயனைத் தண்டனைக்குள்ளாக்கி அண்டம் யாவும் லீலையாய்**
**தயை மிகுந்து காத்து யானை மதமடக்கி அசுரரை**
**ஜயத்துடன் வதைத்து சகல ஜகமும் வாழக்காலனை**
**ஜயித்துப் பகைவர் பயமுறச் செய் புயங்கள் யானும் போற்றுவேன்.**

ஹே ஷண்முகா! சுப்ரமண்யக் கடவுளே! பிரஹ்மாவின் தவறுதலுக்கு தண்டனை அளித்தவராயும் தன் விளையாட்டாகவே சகல அண்டங்களையும் தரிக்கின்றதாயும் யானையின் துதிக்கையைப் பிடித்து அதன் மதத்தை அடக்கினதாயும் சத்ருவாகும் யமபயம் இல்லாது செய்கிறதாயும் தேவர்களின் தலைவனான இந்திரன் முதலான தேவர்களின் சத்ருவான சூரபத்மன் முதலான அசுரர்களை அழித்தவரும் ஜகத்தை ரக்ஷிக்கும் விஷயத்தில் ஜாக்கிரதையாகவும் அக்கறையும் கொண்டவருமான சத்ருக்களுக்கு பயத்தை உண்டுபண்ணுவருமான உனது பன்னிரெண்டு கரங்களையே எப்பொழுதும் அடைக்கலம் புகுகின்றேன்.

सदा शारदाः षण्मृगाङ्का यदि स्युः
समुद्यन्त एव स्थिताश्चेत्समन्तात् ।
सदा पूर्णविम्वाः कलङ्कैश्च हीना-
स्तदा त्वन्मुखानां ब्रुवे स्कन्द साम्यम् ॥ १३

𑌸𑌦𑌾 𑌶𑌾𑌰𑌦𑌾𑌃 𑌷𑌣𑍍𑌮𑍃𑌗𑌾𑌙𑍍𑌕𑌾 𑌯𑌦𑌿 𑌸𑍍𑌯𑍁𑌃
𑌸𑌮𑍁𑌦𑍍𑌯𑌨𑍍𑌤 𑌏𑌵 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌸𑌮𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 ।
𑌸𑌦𑌾 𑌪𑍂𑌰𑍍𑌣𑌬𑌿𑌮𑍍𑌬𑌾𑌃 𑌕𑌲𑌙𑍍𑌕𑍈𑌶𑍍𑌚 𑌹𑍀𑌨𑌾-
𑌸𑍍𑌤𑌦𑌾 𑌤𑍍𑌵𑌨𑍍𑌮𑍁𑌖𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑍇 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍍 ।

13. ஸதா ஸாரதா: ஷண்ம்ருகாங்கா யதி ஸ்யு:
ஸமுத்யந்த ஏவ ஸ்திதாஸ்சேத் ஸமந்தாத்
ஸதா பூர்ணபிம்பா: கலங்கைஸ்ச ஹீநா:
ஸதா த்வந்முகாநாம் ப்ருவே ஸ்கந்த ஸாம்யம்

**பூர்ணசந்திர பிம்பம் ஆறு களங்கமோடு இருக்குமேல்
சீர்முகங்கள் ஆறும் திலகம் கொண்டிலங்கு தென்னுவேன்
பூர்ண சந்திரன் களங்கமற்று திகழும் அந்த நேரத்தில்
சீர்முகங்கள் திலகமற்று திகழ்ந்தது என்று மொழிகுவேன்.**

ஹே! ஸ்கந்தனான சுப்ரமண்ய மூர்த்தியே! எப்பொழுதும் களங்கத்துடன் இருக்கும் அந்த அழகிய சந்திரனை உன் நெற்றியில் அலங்கரிக்கப்பட்ட கஸ்தூரி திலகத்தோடு கூடிய உன் ஆறுமுகத்துக்கு ஒப்பாகக் கூறுவேன். எப்பொழுது சந்திரன் களங்கமின்றி காணப்படுகின்றானோ அந்தச் சமயம் சந்திரனை, உன் நெற்றியில், கஸ்தூரி திலகமில்லாத ஆறுமுகத்துக்கு ஒப்புமையாகக் கூறுவேன்.

स्फुरन्मन्दहासैः सहंसानि चञ्च-
त्कटाक्षावलीभृङ्गसंघोज्ज्वलानि ।
सुधास्यन्दिबिम्बाधरणीशसूनो
तवालोकये षण्मुखाम्भोरुहाणि ॥ १४ ॥

𑌸𑍍𑌫𑍁𑌰𑌨𑍍𑌮𑌨𑍍𑌦𑌹𑌾𑌸𑍈𑌃 𑌸𑌹𑌂𑌸𑌾𑌨𑌿 𑌚𑌞𑍍𑌚
𑌤𑍍𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌾𑌵𑌲𑍀𑌭𑍃𑌂𑌗𑌸𑌂𑌘𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌾𑌨𑌿 ।
𑌸𑍁𑌧𑌾𑌸𑍍𑌯𑌂𑌦𑌿𑌬𑌿𑌂𑌬𑌾𑌧𑌰𑌣𑍀𑌶𑌸𑍂𑌨𑍋
𑌤𑌵𑌾𑌲𑍋𑌕𑌯𑍇 𑌷𑌣𑍍𑌮𑍁𑌖𑌾𑌂𑌭𑍋𑌰𑍁𑌹𑌾𑌣𑌿 ॥

14. ஸ்புரந்மந்தஹாஸை: ஸஹம்ஸாநி சஞ்சத்
கடாக்ஷவலீ ப்ருங்க ஸங்கோஜ்ஜ்வலாநி
ஸுதாஸ்யந்தி பிம்பா தராணீஸ ஸூநோ
தவாலோகயே ஷண்முகாம் போருஹாணி

**பங்கஜத்தை நிகர்முகத்தின் முறுவல் அன்னம் போலவும்**
**துங்கவழிகள் கடைக்கண் நோக்கும். வண்டின் வரிசை போலவும்**
**கங்கை போல அமிர்தம் பொங்கும் அதர பிம்பமோடுமே**
**மங்களம் செய் அந்தக்கமல முகங்கள் ஆறும் கண்டேனே.**

பரமேஸ்வரனின் புத்திரரான ஹே ஷண்முகக் கடவுளே! உன் முகத்தில் ஜ்வலிக்கின்ற புன்சிரிப்புகள் ஹம்ச பக்ஷிகள் போலத் தோன்றுகின்றன. எப்பொழுதும் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருக்கும் கடைக்கண் பார்வைகளோ, தாமரைப் புஷ்பத்தில் தேனைக் கிரஹிக்கவரும் வண்டுகளைப் போல் ஜ்வலித்துக் கொண்டிருப்பவையாகளாயும் அம்ருத ப்ரவாகத்தை பெருக விட்டுக் கொண்டிருக்கும் அதர பிம்பங்களுடன் கூடினவையாகளாயும் விளங்குகிற உன்னுடைய ஆறுமுகங்களை தாமரைப் புஷ்பங்களாகப் பார்க்கின்றேன்.

विशालेषु कर्णान्तदीर्घेष्वजस्रं
दयास्यन्दिषु द्वादशस्वीक्षणेषु ।
मयीषत्कटाक्षः सकृत्पातितश्चे-
द्भवेत्ते दयाशील का नाम हानिः ॥ १५ ॥

𑌵𑌿𑌶𑌾𑌲𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌣𑌾𑌨𑍍𑌤𑌦𑍀𑌰𑍍𑌘𑍇𑌷𑍍𑌵𑌜𑌸𑍍𑌰𑌂
𑌦𑌯𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌿𑌷𑍁 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌸𑍍𑌵𑍀𑌕𑍍𑌷𑌣𑍇𑌷𑍁 ।
𑌮𑌯𑍀𑌷𑌤𑍍𑌕𑌟𑌾𑌕𑍍𑌷𑌸𑍍𑌸𑌕𑍃𑌤𑍍𑌪𑌾𑌤𑌿𑌤𑌶𑍍𑌚𑍇𑌦𑍍
𑌭𑌵𑍇𑌤𑍍𑌤𑍇 𑌦𑌯𑌾𑌶𑍀𑌲 𑌕𑌾 𑌨𑌾𑌮 𑌹𑌾𑌨𑌿𑌃॥

15. விஸாலேஸு கர்ணாந்த தீர்கேஷ்வஜஸ்ரம்
தயாஸ்யந்திஸு த்வாதஸஸ் வீக்ஷணேஷு
மயீஷத் கடாக்ஷ: ஸக்ருத் பாதிதஸ் சேத்
பவேத் தே தயாஸீல கா நாம ஹாநி:

**நன்கு உன் செவிகள் நாடி நீண்ட சாலவும் விசாலமாம்**
**பன்னிரண்டு கண்களின்று பாயும் கருணை வெள்ளமாம்**
**நின்னருள் கடாக்ஷம் இங்கு சற்று என் மீது வீழ்வதால்**
**என்ன குறை உனக்குண்டாகும் இயம்புவாய் தயாநிதே!**

ஹே கிருபாநிதியான சுப்ரமண்ய மூர்த்தியே! விஸ்தீரணமாயும் காதின் மூலபாகம் வரை நீண்டதாயும், எந்த நேரமும் பக்தர்களுக்கு கருணையே வர்ஷிக்கின்றதாயும் உள்ள உன்னுடைய பன்னிரண்டு நேத்ரங்களுக்குள் ஒரு அல்பமான கடாக்ஷமாவது ஒருதடவையேனும் என்னிடத்து விழுந்ததாக ஆகுமேயாயின் அதனால் உனக்கு என்ன குறைவு ஏற்படும்?

सुताङ्गोद्भवो मेऽसि जीवेति षड्धा
जपन्मन्त्रमीशो मुदा जिघ्रते यान् ।
जगद्भारभृद्भ्यो जगन्नाथ तेभ्यः
किरीटोज्ज्वलेभ्यो नमो मस्तकेभ्यः ॥ १६

𑌸𑍁𑌤𑌾𑌙𑍍𑌗𑍋𑌦𑍍𑌭𑌵𑍋 𑌮𑍇𑌽𑌸𑌿 𑌜𑍀𑌵𑍇𑌤𑌿 𑌷𑌡𑍍𑌧𑌾
𑌜𑌪𑌨𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌮𑍀𑌶𑍋 𑌮𑍁𑌦𑌾 𑌜𑌿𑌘𑍍𑌰𑌤𑍇 𑌯𑌾𑌨𑍍 ।
𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌰𑌭𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌜𑌗𑌨𑍍𑌨𑌾𑌥 𑌤𑍇𑌭𑍍𑌯𑌃
𑌕𑌿𑌰𑍀𑌟𑍋𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑍋 𑌮𑌸𑍍𑌤𑌕𑍇𑌭𑍍𑌯𑌃 ॥

16. ஸுதாங்கோத்பவோ மே ஸி ஜீவேதி ஷட்தா
ஜபன் மந்தரமீஸோ முதா ஜிக்ரதே யான்
ஜகத்பார ப்ருத்ப்யோ ஜகந்நாத தேப்ய:
கிரீடோஜ் ஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய:

**மைந்தனே! என் அங்கம் நின்று வந்த நீயும் வாழ்க என்று**
**அந்தமாக ஆறுமுறைகள் மந்திரம் ஜெபித்துமே**
**எந்த ஈசன் உச்சி முகர்ந்து இனிப்பரோ அவ்வுலகம் ஆள்**
**அந்த ரத்ன மகுடம் கொண்ட முடிகள் யானும் வணங்குவேன்**

சர்வலோகத்திற்கும் அதிபதியான ஹே பிரபோ! உன் பிதாவான பரமேஸ்வரன் ஹே குழந்தாய்! என்னுடைய சரீரத்தில் உள்ள சகல அவயங்களுக்குச் சமமான அவயங்களோடு கூடவே உண்டானவனாகின்றாய். தீர்க்காயுளுடன் இருக்க வேண்டும் என்று ஆறு தடவை மந்திரத்தை ஜபித்துக் கொண்டு எந்தத் தலைகளை சந்தோஷத்தோடு உச்சி முகர்ந்து பார்க்கிறாரோ; பிராணிகளுடைய யோக க்ஷேம பாரத்தை வகிக்கின்றவைகளாயும் நவரத்தின மயமான கிரீடங்களால் விளங்குகின்றதாயும் உள்ள அந்த சிரஸுகளை நமஸ்கரிக்கிறேன்.

स्फुरद्रत्नकेयूरहाराभिराम-
श्चलत्कुण्डलश्रीलसद्गण्डभागः ।
कटौ पीतवासः करे चारुशक्तिः
पुरस्तान्ममास्तां पुरारेस्तनूजः ॥ १७ ॥

𑌸𑍍𑌫𑍁𑌰𑌦𑍍𑌰𑌤𑍍𑌨𑌕𑍇𑌯𑍂𑌰𑌹𑌾𑌰𑌾𑌭𑌿𑌰𑌾𑌮-
𑌶𑍍𑌚𑌲𑌤𑍍𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌶𑍍𑌰𑍀𑌲𑌸𑌦𑍍𑌗𑌣𑍍𑌡𑌭𑌾𑌗𑌃 ।
𑌕𑌟𑍌 𑌪𑍀𑌤𑌵𑌾𑌸𑌃 𑌕𑌰𑍇 𑌚𑌾𑌰𑍁𑌶𑌕𑍍𑌤𑌿𑌃
𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌮𑌮𑌾𑌸𑍍𑌤𑌾𑌂 𑌪𑍁𑌰𑌾𑌰𑍇𑌸𑍍𑌤𑌨𑍂𑌜𑌃 ॥

17. ஸ்புரத் ரத்ந கேயூர ஹாராபிராம:
சலத்குண்டலஸ்ரீ லஸத்கண்டபாக:
கடௌ பீதவாஸா: கரே சாருஸக்தி:
புரஸ்தாத் மமாஸ்தாம் புரோரேஸ்தநூஜ:

**கொண்ட ரத்ன ஹாரமோடு மணிகள் தோள் வளைகளும்
குண்டலங்கள் காதிலங்கி சோபையுற்ற கன்னமும்
கொண்டு இடுப்பின பொன்னின் ஆடை கையில் சக்தி வேல் அதும்
கொண்ட கயிலை ஈசன் மைந்தன் காட்சி தந்திலங்கவே.**

பிரகாசிக்கின்ற ரத்ன மயமான அங்கதம் ஹாரம் இவைகளோடு விளங்குகிறவராயும் எப்பொழுதும் அசைந்து கொடுக்கும் காதுகளின் குண்டலங்களுடைய சோபையால் பிரகாசிக்கும் கன்னப் பிரதேசத்தோடு கூடினவராயும் பீதாம்பரத்தை இடுப்பில் தரித்துக் கொண்டிருக்கிறவராயும் சக்தி கொடுத்த அழகான வேல் ஆயுதத்தை கையில் தரித்துக் கொண்டிருக்கிறவராயுமுள்ள பரமேஸ்வரருடைய புத்திரராகிய குமாரசுவாமியானவர் எப்பொழுதும் என்னுடைய முன்பாக விளங்கட்டும்.

इहायाहि वत्सेति हस्तान्प्रसार्या-
ह्वयत्यादराच्छङ्करे मातुरङ्कात् ।
समुत्पत्य तातं श्रयन्तं कुमारं
हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥ १८ ॥

[illegible]

18. இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தாந் ப்ரஸார்யா
ஹ்வயத் யாதராத்சங்கரே மாதுரங்காத்
ஸமுத்பத்ய தாதம் ஸ்ரயந்தம் குமாரம்
ஹராஸ்லிஷ்டகாத்ரம் பஜே பாலமூர்த்திம்

**சாலவும் பரிந்து சங்கரன் கரங்கள் நீட்டியே**
**பாலனே நீ வருக என்று பரிந்தழைத்த போதினில்**
**சீலையம்மை மடியிலிருந்து தாவ ஈசன் அணைத்தோர்**
**பாலமூர்த்தியான குமரன் பஜனை யானும் புரிகுவேன்.**

ஹே குழந்தாய் இங்கு வா என்று இரு கைகளையும் நீட்டிக் கொண்டு தகப்பனாரான பரமேஸ்வரன் பிரியத்தோடு கூப்பிடும் போது தாயாரான பார்வதியின் மடியில் உட்கார்ந்து கொண்டிருந்த குமாரசாமியானவர் மிகவும் உற்சாகத்துடன் வேகமாய் கிளம்பி பரமேஸ்வரனை அடைந்த பரமேஸ்வரனால் ஆலிங்கனம் செய்யப்பட்ட சரீரத்தோடு கூடினவராயும் குழந்தைப் பருவமான சரீரத்தோடு கூடினவராயும் உள்ள குமாரசுவாமியை எப்பொழுதும் போற்றுகின்றேன்.

कुमारेशसूनो गुह स्कन्द सेना-
पते शक्तिपाणे मयूराधिरूढ ।
पुलिन्दात्मजाकान्त भक्तार्तिहारिन्
प्रभो तारकारे सदा रक्ष मां त्वम् ॥ १९

𑌕𑍁𑌮𑌾𑌰𑍇𑌶𑌸𑍂𑌨𑍋 𑌗𑍁𑌹 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦 𑌸𑍇𑌨𑌾-
𑌪𑌤𑍇 𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑌾𑌣𑍇 𑌮𑌯𑍂𑌰𑌾𑌧𑌿𑌰𑍂𑌢 ।
𑌪𑍁𑌲𑌿𑌨𑍍𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌕𑌾𑌨𑍍𑌤 𑌭𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌤𑌿𑌹𑌾𑌰𑌿𑌨𑍍
𑌪𑍍𑌰𑌭𑍋 𑌤𑌾𑌰𑌕𑌾𑌰𑍇 𑌸𑌦𑌾 𑌰𑌕𑍍𑌷 𑌮𑌾𑌂 𑌤𑍍𑌵𑌮𑍍 ॥

19. குமாரேஸ ஸூநோ குஹ ஸ்கந்தஸேநா
பதே ஸக்திபாணே மயூராதிரூட
புலிந்தாத்மஜா காந்த பக்தார்தி ஹாரின்
ப்ரபோ தாரகாரே ஸதா ரக்ஷமாம் த்வம்

**கந்தனே குமாரனே அவ்வீசன் தந்த மைந்தனே**
**அந்தர் சக்தி வேலனே அவ்வேடுவச்சி காந்தனே**
**நொந்த அன்பர் ஆர்த்தி தீர்க்கும் தாரகன் பகைவனே**
**வந்து எனையும் காக்க வேணும் தேவசேனை அதிபனே.**

எப்பொழுதும் குமரன் போல் விளங்குகின்ற முருகனே! பரமேஸ்வரன் புத்ரனே! குகனே! (அறிவுக்கு எளிதில் எட்டாதவனே) ஸ்கந்தனே! (பகதர்களின் பாவங்களை நாசம் செய்து சகல புருஷார்த்தங்களையும் முக்தியையும் அளிப்பவனே) தேவர்கள் சேனைகளின் தலைவனே, பக்தனைக் காக்கும் பொருட்டு துஷ்ட நிக்ரஹம் செய்யக் கூடிய சக்தியாயுதம் (வேல்) தரித்தவனே, மயிலை வாகனமாகக் கொண்டவனே, புளிந்தன் என்ற வேடர் குலத்தில் பிறந்த வள்ளி மணவாளனே, பக்தர்களின் எல்லாவிதமான துயரங்களையும் கஷ்டங்களையும் துடைப்பவனே, தாரகாசுரனை சம்ஹாரம் செய்த மகா பிரபுவே! நீர் என்னை எப்பொழுதும் காக்க வேண்டும்.

प्रशान्तेन्द्रिये नष्टसंज्ञे विचेष्टे
कफोद्गारिवक्त्रे भयोत्कम्पिगात्रे ।
प्रयाणोन्मुखे मय्यनाथे तदानीं
द्रुतं मे दयालो भवाग्रे गुह त्वम् ॥ २०

𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇 𑌨𑌷𑍍𑌟𑌸𑌂𑌜𑍍𑌞𑍇 𑌵𑌿𑌚𑍇𑌷𑍍𑌟𑍇
𑌕𑌫𑍋𑌦𑍍𑌗𑌾𑌰𑌿𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑍇 𑌭𑌯𑍋𑌤𑍍𑌕𑌮𑍍𑌪𑌿𑌗𑌾𑌤𑍍𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑍋𑌨𑍍𑌮𑍁𑌖𑍇 𑌮𑌯𑍍𑌯𑌨𑌾𑌥𑍇 𑌤𑌦𑌾𑌨𑍀𑌂
𑌦𑍍𑌰𑍁𑌤𑌂 𑌮𑍇 𑌦𑌯𑌾𑌲𑍋 𑌭𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌗𑍁𑌹 𑌤𑍍𑌵𑌮𑍍

20. ப்ரஸாந்தேந்த்ரியே நஷ்ட ஸம்ஜ்ஞே விசேஷ்டே
கபோத்காரி வக்த்ரே பயோத்கம்பிகாத்ரே
ப்ராயாணோந்முகே மய்யநாதே ததாநீம்
த்ருதம் மே தயாளோ பவாக்ரே குஹம் த்வம்

**புலனழிந்து நினைவொழிந்து கபம் நிறைந்து கக்கியும்**
**சலனமின்றி கரணம் ஓய்ந்து பயமடைந்து நடுங்கிடும்**
**மலிந்த தேகம் விடுக்கக் காலை தயை மிகுந்த குகனை நீ**
**வலிய என்முன் விரைவில் தோன்றி எனையும் காக்க வேணுமே.**

ஹே கிருபாநிதியே! சுப்ரமண்யக் கடவுளே, அதிரஹஸ்யமான மகிமையுள்ள ஹே சுவாமியே! நீ என்னிடம் லயித்துப் போன இந்திரியங்களோடு கூடினவனாயும் ஞாபகசக்தி இல்லாதவனாயும், கை கால்களை அசைக்கக்கூட இயலாத நிலையில் இருப்பவனாயும், ஓய்ந்து போனவனாயும் கபமோ அதிகமாகி உன்னுடைய நாமாவை உச்சரிக்கக்கூட சக்தி இல்லாதவனாயும், யம பயத்தால் நடுங்குகிற சரீரத்தைக் கொண்டவனாயும், சரீரத்தை விட்டு பரலோகம் செல்வதில் சித்தனாயும், என்னை ரக்ஷிக்கும் வேறுநாதன் இல்லாதவனாயும் இருக்கும் பொழுது சீக்கிரமாக என் முன்பு நீ பிரகாசமாகி ரக்ஷிக்க வேண்டும்.

कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपा-
द्दह च्छिन्द्धि भिन्द्धीति मां तर्जयत्सु ।
मयूरं समारुह्य मा भैरिति त्वं
पुरः शक्तिपाणिर्ममायाहि शीघ्रम् ॥ २१ ॥

𑌕𑍃𑌤𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌦𑍂𑌤𑍇𑌷𑍁 𑌚𑌣𑍍𑌡𑍇𑌷𑍁 𑌕𑍋𑌪𑌾𑌤𑍍
𑌦𑌹 𑌛𑌿𑌨𑍍𑌧𑌿 𑌭𑌿𑌨𑍍𑌧𑍀𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌤𑌰𑍍𑌜𑌯𑌤𑍍𑌸𑍁 ।
𑌮𑌯𑍂𑌰𑌂 𑌸𑌮𑌾𑌰𑍁𑌹𑍍𑌯 𑌮𑌾 𑌭𑍈𑌰𑌿𑌤𑌿 𑌤𑍍𑌵𑌂
𑌪𑍁𑌰𑌃 𑌶𑌕𑍍𑌤𑌿𑌪𑌾𑌣𑌿𑌰𑍍𑌮𑌮𑌾𑌯𑌾𑌹𑌿 𑌶𑍀𑌘𑍍𑌰𑌂 ॥

21. க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஷு கோபாத்
தஹச்சிந்தி பிந்தீதி மாம் தர்ஜயத்ஸு
மயூரம் ஸமாருஹ்ய மாபைரிதி த்வம்
புர: ஸக்திபாணிர் மமாயாஹி ஸீக்ரம்

**எமதூதர் கோபமோடு. வெட்டு. துண்டு தகிஎன
பயமுறுத்தி துன்புறுத்தும் போது துரிதமாகவே
மயிலின் ஏறி சக்தி வேலும் கையில் கொண்டு முருகனே
பயமும் நீங்க அபயம் அருளி காக்க என்முன் வருகவே.**

உக்ர சுவாபம் உள்ள யமனுடைய தூதர்கள் கோபத்தோடு கூடி பொசுக்கு, வெட்டு, இரண்டாகப் பிள என்று சொல்லி அதட்டி இம்சை செய்யும் போது, பிரபுவே, வேலாயுதனே! நீ சக்தியென்ற வேலாயுதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு "நீ பயப்பட வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டு மயில் மீது ஏறி சீக்கிரமே என் முன் வரவேண்டும் என்று பிரார்த்திக்கின்றேன்.

प्रणम्यासकृत्पादयोस्ते पतित्वा
प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेकवारम् ।
न वक्तुं क्षमोऽहं तदानीं कृपाब्धे
न कार्यान्तकाले मनागप्युपेक्षा ॥ २२ ॥

𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯𑌾𑌸𑌕𑍃𑌤𑍍𑌪𑌾𑌦𑌯𑍋𑌸𑍍𑌤𑍇 𑌪𑌤𑌿𑌤𑍍𑌵𑌾
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑍋 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑍇𑌽𑌨𑍇𑌕𑌵𑌾𑌰𑌮𑍍 ।
𑌨 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌕𑍍𑌷𑌮𑍋𑌽𑌹𑌂 𑌤𑌦𑌾𑌨𑍀𑌂 𑌕𑍃𑌪𑌾𑌬𑍍𑌧𑍇
𑌨 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 𑌮𑌨𑌾𑌗𑌪𑍍𑌯𑍁𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 ॥

22. ப்ரணம்யாஸக்ருத் பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்த்தயேநேக வாரம்
ந வக்தும் க்ஷமோஹம் ததாநீம் க்ருபாப்தே
ந கார்யாந்தகாலே மநாகப்யுபேக்ஷா

**ஈசனே கிருபாநிதே நீ எந்தன் அந்திமத்திலே**
**பேச சக்தியற்ற போது சற்றும் அசட்டை செய்திடாது**
**ஆசையோடு காக்குமாறு நித்தம் தெண்டனிட்டுமே**
**நேசமோடு பாதம் விழ்ந்து நானும் வேண்டி நிற்கிறேன்.**

ஹே குமாரக் கடவுளே, முருகனே, சுவாமிநாதா! ஹே! கருணா சமுத்திரமே, என்னுடைய ப்ராண வியோக காலத்தில் நமஸ்கரிக்கவோ, கூப்பிடவோ, முடியாமல் இருக்கும் போது நான் உனக்கு முன்னமேயே நமஸ்கரித்து பல தடவை தண்டமிட்டு உன்னை சந்தோஷிக்கச் செய்திருக்கின்றேன். எனவே அந்தக் கடைசி காலத்தில் என் பிராணன் போகும் கடைசி தருவாயில் கொஞ்சம் கூட அலட்சியப்படுத்தாது என்னைக் காப்பதற்கு நீ வரவேண்டும் என உன்னைப் பிரார்த்திக்கிறேன்.

सहस्राण्डभोक्ता त्वया शूरनामा
हतस्तारकः सिंहवक्त्रश्च दैत्यः ।
ममान्तर्हृदिस्थं मनःक्लेशमेकं
न हंसि प्रभो किं करोमि क्व यामि ॥ २३ ।

𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑍍𑌡𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌶𑍂𑌰𑌨𑌾𑌮𑌾
𑌹𑌤𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑌸𑌿𑌂𑌹𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌶𑍍𑌚 𑌦𑍈𑌤𑍍𑌯𑌃 ।
𑌮𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌥𑌂 𑌮𑌨𑌃𑌕𑍍𑌲𑍇𑌶𑌮𑍇𑌕𑌂
𑌨 𑌹𑌂𑌸𑌿 𑌪𑍍𑌰𑌭𑍋 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍋𑌮𑌿 𑌕𑍍𑌵 𑌯𑌾𑌮𑌿 ।

23. ஸஹஸ்ராண்ட போக்தா த்வயா ஸூரநாமா
ஹதஸ்தாரக: ஸிம்ஹ வக்த்ரஸ்ச தைத்ய:
மமாந்தர் ஹ்ருதிஸ்தம் மந: க்லேஸமேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி க்வ யாமி

**அண்டமாயிரங்கள் ஆண்ட சூரபத்தன் தன்னையும்**
**சண்டை செய்த சிங்க முகவன் தாரகனையும் கொன்ற நீ**
**கொண்ட எந்தன் உள்ளத்தாபம் ஒன்றை நீக்க வில்லையேல்**
**அண்டியாரை அடைகுவேன் இனி யானும் என்ன செய்குவேன்?**

ஹே சுப்ரமண்யச் சுவாமியே! சகல லோகங்களையும் தன் வசமாக்கிக் கொண்டு ஆண்டு வந்த சூரன் என்று அசுரனானவன் ன்னால் கொல்லப்பட்டான். அது போலவே தாரகாசுரனும், சிம்மவத்ரன் என்ற அசுரனும் உன்னால் கொல்லப்பட்டனர். அதனால் அவர்கள் தங்களுடைய பாவங்களில் இருந்து விடுபட்டு நற்கதியை அடைந்தனர். என்னுடைய ஹ்ருதய ஆகாசத்துக்குள் இருக்கும் மனத்தின் தாபமென்ற ஒன்றை நீ ஏன் இன்னும் கொல்லாமல் இருக்கிறாய்? (அதை அழித்தால் அல்லவோ நான் தூய்மையானவன் ஆவேன்). நீ அவற்றைக் கொல்லாமல் இருப்பாயானால் நான் என்ன செய்வேன்? எங்கு போவேன்?

अहं सर्वदा दुःखभारावसन्नो
भवान्दीनबन्धुस्त्वदन्यं न याचे ।
भवद्भक्तिरोधं सदा क्लृप्तबाधं
ममाधिं द्रुतं नाशयोमासुत त्वम् ॥ २४ ।

𑌅𑌹𑌂 𑌸𑌵𑌦𑌾 𑌦𑍁𑌃𑌖𑌭𑌾𑌰𑌾𑌵𑌸𑌨𑍍𑌨𑍋
𑌭𑌵𑌾𑌨𑍍𑌦𑍀𑌨𑌬𑌨𑍍𑌧𑍁𑌸𑍍𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌯𑌂 𑌨 𑌯𑌾𑌚𑍇 ।
𑌭𑌵𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍋𑌧𑌂 𑌸𑌦𑌾 𑌕𑍍𑌲𑍃𑌪𑍍𑌤𑌬𑌾𑌧𑌂
𑌮𑌮𑌾𑌧𑌿𑌂 𑌦𑍍𑌰𑍁𑌤𑌂 𑌨𑌾𑌶𑌯𑍋𑌮𑌾𑌸𑍁𑌤 𑌤𑍍𑌵𑌮𑍍 ।

24. அஹம் ஸர்வதா துக்க பாராவஸந்நோ
பவாந் தீநபந்து: த்வதந்யம் ந யாசே
பவத் பக்தி ரோதம் ஸதா க்லுப்த பாதம்
மமாதிம் த்ருதம் நாஸயோமாஸுத த்வம்

**அன்னை உமையின் மைந்தனே, அத்தீனர்கள் பங்காளனே**
**உன்னையன்றி வேறு தெய்வம் ஒன்றை யானும் வேண்டிலேன்**
**என்னை என்றும் வாட்டி உந்தன் பக்தியைத் தவிர்த்திடும்**
**என்னுளத்தின் நோயகற்ற விரைவில் இங்கு வருகவே.**

தீனபந்துவான ஹே சுப்ரமண்யக் கடவுளே! பார்வதி புத்திரனே, நான் எப்பொழுதும் துக்கம் அதிகமாகி துக்க பாரத்தால் பீடிக்கப்பட்டவனாக இருக்கின்றேன். உன்னைத் தவிர வேறு எந்த தெய்வத்தையும் நான் யாசிக்க மாட்டேன். எனவே நீ எப்பொழுதும் என்னை இம்சை செய்கிறதாயும் உன்னுடைய பக்தியைத் தடுக்கிறதாயும் உள்ள என் மன வியாதியை சீக்கிரமாக நாசம் செய்து என்னை காப்பாற்றுவாயாக.

अपस्मारकुष्टक्षयार्शः प्रमेह-
ज्वरोन्मादगुल्मादिरोगा महान्तः ।
पिशाचाश्च सर्वे भवत्पत्रभूतिं
विलोक्य क्षणात्तारकारे द्रवन्ते ॥ २५ ॥

𑌅𑌪𑌸𑍍𑌮𑌾𑌰𑌕𑍁𑌷𑍍𑌟𑌕𑍍𑌷𑌯𑌾𑌰𑍍𑌶𑌃𑌪𑍍𑌰𑌮𑍇𑌹-
𑌜𑍍𑌵𑌰𑍋𑌨𑍍𑌮𑌾𑌦𑌗𑍁𑌲𑍍𑌮𑌾𑌦𑌿𑌰𑍋𑌗𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌃 ।
𑌪𑌿𑌶𑌾𑌚𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌭𑌵𑌤𑍍𑌪𑌤𑍍𑌰𑌭𑍂𑌤𑌿𑌂
𑌵𑌿𑌲𑍋𑌕𑍍𑌯 𑌕𑍍𑌷𑌣 𑌤𑍍𑌤𑌾𑌰𑌕𑌾𑌰𑍇 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑍇 ।

25. அபஸ்மார குஷ்டக்ஷயார்ஸ: ப்ரமேஹ
ஜ்வரோந்மாத குல்மாதி ரோகா மஹாந்த:
பிஸாசாஸ்ச ஸர்வே பவத்பத்ரபூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே

**மெத்த கொடிய வலிப்பும், ஜுரமும், மேகமோடு காசமும்,**
**சித்தப்ரம்மை குட்டமோடு, ஸ்வாச நோயும், குன்மமும்**
**சக்திமிக்க பேய்கள் யாவும் தாரகன் பகைவனின்**
**பத்திரத்தில் இட்டநீற்றை பார்த்த நொடியில் ஒடுமே.**

தாரகாசுரனுக்கு சத்ருவான ஹே சுப்ரமண்யக் கடவுளே! அபஸ்மாரம், மிகவும் பெரிதான குஷ்டம், குல்மாதி, க்ஷயரோகம், ஜுரம், சித்த பிராந்தி, வயிற்று வலி முதலான கொடிய நோய்களும் பூதப்பிரேத பிரம்ம ராக்ஷசர்களும் உன்னுடைய விபூதியைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒரு க்ஷணத்திற்குள் ஒடி மறைந்து விடுகின்றன. அழிந்தும் போகின்றன.

दृशि स्कन्दमूर्तिः श्रुतौ स्कन्दकीर्ति-
र्मुखे मे पवित्रं सदा तच्चरित्रम् ।
करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं
गुहे सन्तु लीना ममाशेषभावाः ॥ २६ ॥

𑌦𑍃𑌶𑌿 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑍌 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃
𑌮𑍁𑌖𑍇 𑌮𑍇 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌸𑌦𑌾 𑌤𑌚𑍍𑌚𑌰𑌿𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌕𑌰𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 𑌵𑌪𑍁𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌭𑍃𑌤𑍍𑌯𑌂
𑌗𑍁𑌹𑍇 𑌸𑌨𑍍𑌤𑍁 𑌲𑍀𑌨𑌾 𑌮𑌮𑌾𑌶𑍇𑌷𑌭𑌾𑌵𑌾𑌃॥

26. த்ருஸி ஸ்கந்தமூர்த்தி: ஸ்ருதௌ ஸ்கந்தகீர்த்தி:
முகே மே பவித்ரம் ஸதா தச்சரித்ரம்
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ருத்யம்
குஹே ஸந்து லீநா மமாஸேஷ பாவா:

**கண்ணும் கந்தன் வடிவைக்காண, காதும் புகழைக் கேட்கவும்**
**வண்ண மாமவன் சரித்திரம் வாக்கில் வர என் கைகளால்**
**பண்ணும் பணிகள் அவனதாய் என் தேகம் செய்த சேவையே**
**இன்னும் எந்தன் செய்கையாவும் என்றும் குகனை அடையவே.**

என் கண்கள் எப்பொழுதும் ஆறுமுகக் கடவுளான உன்னையே பார்க்க வேண்டும். உயிர்களுக்கெல்லாம் நன்மை செய்யும் உனது பெருமையை எப்பொழுதும் என் காது கேட்கட்டும். பரிசுத்தமான ச்ரவணம் (உனது மகிமையை) செய்யும் ஜனங்களின் பாபங்களைப் போக்கக்கூடிய உன்னால் எங்களால் உணர முடியாத (உனது) லீலைகளை எப்பொழுதும் என்னுடைய முகத்தினின்ஸ் எழ வேண்டும். உனது அவதார லீலைகளையே என் நாவானது சதா சொல்லட்டும். என் கைகள் சதா உனது தொண்டையே செய்யட்டும். என் சரீரமானது உன்னுடைய தாசனாகும் பணியையே செய்யட்டும். என்னுடைய அபிநய சேஷ்டைகள் என்றும் உன்னுடைய கரங்களிலேயே லயித்தவைகளாகவே இருக்கட்டும். (ஹே சுப்ரமண்யக் கடவுளே இப்படி என்னை செய்ய மாட்டாயா?)

मुनीनामुताहो नृणां भक्तिभाजा-
मभीष्टप्रदाः सन्ति सर्वत्र देवाः ।
नृणामन्त्यजानामपि स्वार्थदाने
गुहाद्देवमन्यं न जाने न जाने ॥ २७ ॥

𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌮𑍁𑌤𑌾𑌹𑍋 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌭𑌾𑌜𑌾-
𑌮𑌭𑍀𑌷𑍍𑌟𑌪𑍍𑌰𑌦𑌾𑌃 𑌸𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾𑌃 ।
𑌨𑍃𑌣𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌯𑌜𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌸𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌾𑌨𑍇
𑌗𑍁𑌹𑌾𑌦𑍍𑌦𑍇𑌵𑌮𑌨𑍍𑌯𑌂 𑌨 𑌜𑌾𑌨𑍇 𑌨 𑌜𑌾𑌨𑍇॥

27. முநீநா முதாஹோ ந்ருணாம் பக்திபாஜாம்
அபீஷ்ட ப்ரதாஸ் ஸந்தி ஸர்வத்ர தேவா:
ந்ருணாமந்த்ய ஜாநாமபி ஸ்வார்த்ததாநே
குஹாத் தேவமந்யம் ந ஜாநே ந ஜாநே

**வானவர்க்கும் இவ்வுலகமெங்கும் பக்தியோடு போற்றிடும்**
**மானிடர்க்கும், முனிவர்கட்கும் மனதில் நினைப்பதருளுவாய்**
**ஈனஜாதி புலையருக்கும் யாவும் ஈந்து காக்கும்**
**மேலான தெய்வம் குகனையன்றி அறிகிலேன் வேறு அறிகிலேன்.**

எல்லா லோகங்களிலும் தேவர்கள், தன்னை வணங்கும் முனிகள், பக்த ஜனங்கள் முதலியவர்களின் அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்கிறார்கள். ஆனால் நீயோ சாமானியர்களையும் கூட அபீஷ்டங்களைக் கொடுத்து அவர்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறாய். அம்மாதிரியான கருணை தெய்வம் குஹனே! உன்னைத் தவிர சேவிப்பதற்கு வேறு தெய்வத்தை நான் ஒருபோதும் அறிகிலேன்.

कलत्रं सुता बन्धुवर्गः पशुर्वा
नरो वाथ नारि गृहे ये मदियाः ।
यजन्तो नमन्तः स्तुवन्तो भवन्तं
स्मरन्तश्च ते सन्तु सर्वे कुमार ॥ २८ ॥

കളത്രം സുതാബന്ധുവർഗ്ഗഃ പശുർവ്വാ
നരോ വാഥ നാരീ ഗൃഹേ യേ മദീയാഃ ।
യജന്തോ നമന്തഃ സ്തുവന്തോ ഭവന്തം
സ്മരന്തശ്ച തേ സന്തു സർവ്വേ കുമാര॥

28. களத்ரம் ஸுதா பந்து வர்க: பஸுர்வா
நரோவாத நாரீ க்ருஹே யே மதீயா:
யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தஸ்ச தே ஸந்து ஸர்வே குமார

**இங்கு எந்தன் இல்லம் உள்ள எந்தன் மனைவி மக்களும்
மங்கையரும் பசுக்கள் மித்திரர் மற்றும் எந்தன் சுற்றமும்
இங்கு எனைச்சேர் சகலமும் நின் அன்பராகிக் குமரனே
நன்கு உன் தியானம் பூஜை செய்து நமஸ்கரித்து வாழவே.**

ஹே முருகா, ஷண்முகா! எனக்கு உன்னிடம் ஒரு சிறிய பிரார்த்தனை. அது என்னவென்றால், என் வீட்டில் என் மனைவி, என் குழந்தைகள், பசுக்கள் மற்றும் என்னுடன் சகவாசம் செய்யும் மனிதர்கள், என் பந்துக்கள் மற்ற என்னைச் சேர்ந்தவர்கள் உன்னைச் சேவிக்கட்டும், உன்னையே நமஸ்காரம் செய்யட்டும், உன்னையே தஞ்சம் அடைபவர்களாயும், நினைப்பவர்களாகவும் இருக்கட்டும். (இப்படியான என் ஆசையைப் பூர்த்தி செய்வாயா?)

मृगाः पक्षिणो दंशका ये च दुष्टा-
स्तथा व्याधयो बाधका ये मदङ्गे ।
भवच्छक्तितीक्ष्णाग्रभिन्नाः सुदूरे
विनश्यन्तु ते चूर्णितक्रौञ्चशैल ॥ २९ ॥

𑌮𑍃𑌗𑌾𑌃 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑍋 𑌦𑌂𑌶𑌕𑌾 𑌯𑍇 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾-
𑌸𑍍𑌤𑌥𑌾 𑌵𑍍𑌯𑌾𑌧𑌯𑍋 𑌬𑌾𑌧𑌕𑌾 𑌯𑍇 𑌮𑌦𑌙𑍍𑌗𑍇 ।
𑌭𑌵𑌚𑍍𑌛𑌕𑍍𑌤𑌿𑌤𑍀𑌕𑍍𑌷𑌣𑌾𑌗𑍍𑌰𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌃 𑌸𑍁𑌦𑍂𑌰𑍇
𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌚𑍂𑌰𑍍𑌣𑌿𑌤𑌕𑍍𑌰𑍌𑌞𑍍𑌚𑌶𑍈𑌲 ॥

29. ம்ருகா: பக்ஷிணோ தம்ஸகா யே ச துஷ்டா:
ஸ்ததா வ்யாதயோ பாதகா யே மதங்கே
பவச்சக்தி தீக்ஷ்ணாக்ரபிந்ணா: ஸுதூரே
விநஸ்யந்து தே சூர்ணித க்ரௌஞ்ச ஸைலே

**என்னுடற்கு துன்பம் ஈயும் பட்சிகள் கொசுக்களை**
**இன்னும் மிருக வகையினோடு பின்னும் கொடிய நோய்களை**
**முன்னம் கிரௌஞ்சகிரி துளைத்த சக்தி வேலின் கூர்மையால்**
**பின்னமாகி தூரமேகப் பண்ணுவாய் என் ஷண்முகா.**

க்ராணாசுரனைக் கொன்ற ஹே ஷண்முகா! என்னுடைய சரீரமானது ஏதாவது மிருகமோ, பட்சிகளோ, (பிராணிகளோ) கொடூரமான வியாதிகளோ, இம்சை செய்யக்கூடியதான உபாதைகளோ, இவைகளால் எப்பொழுது பாதிக்கப்படுமோ அப்பொழுது உன்னிடம் பயத்தால் மலை போல் ஸ்வரூபம் எடுத்துக் கொண்டு, பாசித்து வந்த க்ராணாசுரனை எவ்வாறு கொன்றாயோ அதே போல், சக்தியாயுதம் ஏந்திய நீ அதனால் என்னுடைய சகல விதமான வியாதிகளையும் அழித்து என்னைக் காப்பாற்றுவாயாக.

जनित्री पिता च स्वपुत्रापराधं
सहेते न किं देवसेनाधिनाथ ।
अहं चातिबालो भवान् लोकतातः
क्षमस्वापराधं समस्तं महेश ॥ ३० ॥

𑌜𑌨𑌿𑌤𑍍𑌰𑍀 𑌪𑌿𑌤𑌾 𑌚 𑌸𑍍𑌵𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌪𑌰𑌾𑌧𑌂
𑌸𑌹𑍇𑌤𑍇 𑌨 𑌕𑌿𑌂 𑌦𑍇𑌵𑌸𑍇𑌨𑌾𑌧𑌿𑌨𑌾𑌥।
𑌅𑌹𑌂 𑌚𑌾𑌤𑌿𑌬𑌾𑌲𑍋 𑌭𑌵𑌾𑌨𑍍 𑌲𑍋𑌕𑌤𑌾𑌤𑌃
𑌕𑍍𑌷𑌮𑌸𑍍𑌵𑌾𑌪𑌰𑌾𑌧𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌂 𑌮𑌹𑍇𑌶।

30. ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே ந கிம் தேவஸேநாதி நாத
அஹம் சாதி பாலோ பவாந் லோக தாத:
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேஸ

**தந்தை தாய்தம் மைந்தர் செய்யும் தவறு பொறுப்பதில்லையோ?**
**இந்த ஏழை பிழை மகுத்த சிறிய பாலன் ஆகையால்**
**தந்தை லோகம் யாவனிற்கும் தாங்களே இங்காவதால்**
**வந்து என் குற்றம் பொறுத்தறுள்வீர் தேவர் சேனை அதிபனே.**

தவறு செய்யக்கூடிய சூழ்நிலையில் இருக்கும் குழந்தையின் தவற்றை, தாய் தந்தையர் எவ்வாறு பொறுத்துக் கொள்கிறார்களோ அதைப் போல சிறு குழந்தையைப் போல யான் செய்யும் எல்லாத் தவறுகளையும் லோகத்திற்கே தகப்பனாக விளங்கும் பரமேஸ்வரனின் புத்திரனே, தேவசேனாதிபதியுடன் கூடிய ஹே சுப்ரமண்யக் கடவுளே, நீ பொறுத்து என்னை சகலவிதமான ஆபத்துக்களில் இருந்தும் ரக்ஷிக்க வேண்டும்.

**नमः केकिने शक्तये चापि तुभ्यं**
**नमश्छाग तुभ्यं नमः कुक्कुटाय ।**
**नमः सिन्धवे सिन्धुदेशाय तुभ्यं**
**पुनः स्कन्दमूर्ते नमस्ते नमोऽस्तु ॥ ३१ ॥**

𑌨𑌮𑌃 𑌕𑍇𑌕𑌿𑌨𑍇 𑌶𑌕𑍍𑌤𑌯𑍇 𑌚𑌾𑌪𑌿 𑌤𑍁𑌭𑍍𑌯𑌂
𑌨𑌮𑌶𑍍𑌛𑌾𑌗 𑌤𑍁𑌭𑍍𑌯𑌂 𑌨𑌮𑌃 𑌕𑍁𑌕𑍍𑌕𑍁𑌟𑌾𑌯 ।
𑌨𑌮𑌃 𑌸𑌿𑌨𑍍𑌧𑌵𑍇 𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌦𑍇𑌶𑌾𑌯 𑌤𑍁𑌭𑍍𑌯𑌂
𑌪𑍁𑌨𑌃 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌮𑍂𑌰𑍍𑌤𑍇 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 ।

31. நம: கேகிநே ஸக்தயே சாபி துப்யம்
நமஸ்சாக துப்யம் நம: குக்குடாய
நம: ஸிந்தவே ஸிந்து தேஸாய துப்யம்
புந: ஸ்கந்தமூர்த்தே நமஸ்தே நமோஸ்து

**உந்தன் சக்தி வேலினிற்கும் மயிலினிற்கும் வந்தனம்**
**அந்தமான சேவலுக்கும் ஆட்டினிற்கும் வந்தனம்**
**சிந்துவுக்கு வந்தனம் அச்செந்திலுக்கு வந்தனம்**
**கந்தனுக்கென் வந்தனம் இனி வந்தனம் மறு வந்தனம்.**

வேத ஸ்வரூபமான மயிலுக்கு நமஸ்காரம். அதே போல், சகல சித்திகளையும் அளிக்கும் நீ கையிலேந்தி இருக்கும் சக்தி ஆயுதத்திற்கு உன் பொருட்டு நமஸ்காரம். தத்துவ ரூபமாகிய செம்மறி ஆட்டு வாகனத்திற்கு உன் பொருட்டு நமஸ்காரம். அஹங்கார தத்வமாகிய கோழி வாகனத்திற்கு நமஸ்காரம். ஆனந்த ரூபமான சமுத்திரத்தின் பொருட்டு நமஸ்காரம். ஹே சுப்ரமண்ய கடவுளே, மறுபடியும் உன் பொருட்டு நமஸ்காரம். என் நமஸ்காரங்கள் யாவும் உன்னிடம் சேரட்டும்.

जयानन्दभूमञ्जयापारधाम-
ञ्जयामोघकीर्ते जयानन्दमूर्ते ।
जयानन्दसिन्धो जयाशेषबन्धो
जय त्वं सदा मुक्तिदानेशसूनो ॥ ३२ ॥

𑌜𑌯𑌾𑌮𑍋𑌘𑌕𑍀𑌰𑍍𑌤𑍇 𑌜𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑍂𑌰𑍍𑌤𑍇 ।
𑌜𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑌿𑌨𑍍𑌧𑍋 𑌜𑌯𑌾𑌶𑍇𑌷𑌬𑌨𑍍𑌧𑍋
𑌜𑌯 𑌤𑍍𑌵𑌂 𑌸𑌦𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌾𑌨𑍇𑌶𑌸𑍂𑌨𑍋 ॥

32. ஜயாநந்த பூமந் ஜயாபார தாமந்
ஜயாமோககீர்த்தே ஜயாநந்தமூர்த்தே
ஜயாநந்தஸிந்தோ ஜயாஸேஷபந்தோ
ஜய த்வம் ஸதா முக்திதாநேஸ ஸூநோ

**மங்களம் ஆனந்தனுக்கும் பரஞ்சுடர்க்கும் மங்களம்**
**இங்கமோக கீர்த்தியானுக்கு இன்பனுக்கும் மங்களம்**
**பொங்கும் இன்ப வாரிலோக பந்துவிற்கு மங்களம்**
**நன்கு முக்தி ஈயும் ஈசன் மைந்தர்க்கென்றும் மங்களம்.**

அபரிமிதமான ஆனந்தத்தை உருவாக உடையவரான ஹே சுப்ரமண்யக் கடவுளே! உன்னுடைய உத்கர்ஷத்தை பிரகாசப்படுத்து. பேரின்பம் என்ற பிரம்மானந்தமோ பேரின்பம் சிற்றின்பம் என்ற இரண்டு விதமான ஆனந்தமோ, அக்ஞானமோ லோகம் முழுமையும் பரவும் கீர்த்தியோ ஆபத்துக்காலத்தை நிவர்த்தி செய்து வைக்கும் பந்துவினுடைய அபேக்ஷையோ மோக்ஷாபேக்ஷையோ இவைகள் யாவும் ஜீவனால் எதிர்பார்க்கிறபடியால் அவைகள் யாவற்றையும் ஜீவனுக்கு அளித்து ஜீவனை ரக்ஷிக்கக்கூடிய சக்தியுள்ள சுப்ரமண்யக் கடவுளே, நீ ஒவ்வொரு விஷயத்திலும் பிரகாசப் படுத்தி என்னை ரக்ஷிக்க வேண்டும்.

भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः
पठेद्भक्तियुक्तो गुहं संप्रणम्य ।
सुपुत्रान्कलत्रं धनं दीर्घमायु-
र्लभेत्स्कन्दसायुज्यमन्ते नरः सः ॥ ३३ ॥

𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌾𑌖𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌕𑍍𑌲𑍢𑌪𑍍𑌤𑌂 𑌸𑍍𑌤𑌵𑌂 𑌯𑌃
𑌪𑌠𑍇𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌗𑍁𑌹𑌂 𑌸𑌂𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 ।
𑌸𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌕𑌲𑌤𑍍𑌰𑌂 𑌧𑌨𑌂 𑌦𑍀𑌰𑍍𑌘𑌮𑌾𑌯𑍁-
𑌰𑍍𑌲𑌭𑍇𑌤𑍍𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑍇 𑌨𑌰𑌃 𑌸𑌃 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌶𑌙𑍍𑌕𑌰𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑌂
𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌂 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍.

33. புஜங்காக்ய வ்ருத்தேந க்லுப்தம் ஸ்தவம் ய:
படேத் பக்தி யுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய
ஸ புத்ரான் களத்ரம் தனம் தீர்க்கமாயு:
லபேத் ஸ்கந்தஸாயுஜ்யமந்தே நர: ஸ:

**கந்தனன்பு கொண்டு நித்தம் இந்தத் துதிகள் பாடுவோர்**
**அந்தமாக மனைவி மக்களோடு தீர்க்க ஆயுளும்**
**இந்த உலகில் எண்ணிலாத நிதியும் பெற்று அதற்கு மேல்**
**அந்தியத்தில் கந்தன் பதமும் அடைந்து நாளும் வாழ்வரே.**

புஜங்காக்ய விருத்தத்தில் செய்யப்பட்டதான இந்த ஸ்தோத்திரத்தை பக்தி ச்ரத்தையுடன், அறிவுக்கெட்டாதவனும் எளிதில் அடையக்கூடியவனுமான உன்னை நமஸ்கரித்து யார் பாராயணம் செய்கிறார்களோ, அவர்கள் இஹத்தில் நல்ல மனைவி, சத் புத்திரர்கள், அளவற்ற செல்வம், நல்ல ஆயுள் இவையாவையும் அடைவதுடன் பரத்தில் முருகனுடைய ஸாயுஜ்ய பதவியையும் அடைவார்கள் என்பது திண்ணம்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத விரசிதம்
ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்க ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.



ஸ்ரீ சர்மா சாஸ்திரிகளின் சொந்த ஊர் கும்பகோணம். தற்போது சென்னையில் வைதீகத்தில் ஈடுபட்டிருந்தாலும் , பெரும்பாலும் தனது நேரத்தை எழுத்துத் துறையிலும், பலருக்கு வேதம் கற்றுக் கொடுப்பதிலும் செலவழித்து வருகிறார்.

சர்மாஜி என்றும் அன்புடன் அழைக்கப்படும் இவர், கடந்த காலத்தில், 40 ஆண்டுகளுக்கு மேல் ஆர்.எஸ்.எஸ், விஜில், இரத்த தான இயக்கம், கிராம வளர்ச்சி இயக்கம், ஸ்வதேசி ஜாக்ரன் போன்ற பல பொது ஸ்தாபனங்களில் மிக "ஆக்டிவாக" செயல்பட்டிருக்கிறார்.

தற்போது 65 வயதை எட்டியுள்ள இந்நூலாசிரியர் எழுதிய The Great Hindu Tradition ஆங்கில நூல் மற்றும் தமிழில் வேதமும் பண்பாடும புஸ்தகமும் நல்ல வரவேற்பை பெற்று பிரபலமடைந்துள்ளன, குறிப்பாக ஆங்கிலம் தெரிந்த அனுஷ்டானத்தில் நம்பிக்கையுள்ள நமது இளைஞர்கள் நடுவே இந்நூல் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது என்றால் மிகையாகாது.




**இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள தலைப்புகளில் சில:**

- வேத பிரபாவம்/ வேத லக்ஷணம்.
- மகரிஷிகள்.
- கூஷ்மாண்ட ஹோமத்தின் முக்கியத்துவம்.
- மகாபாரதம்.
- விவாஹம்.
- அபர கர்மா/பித்ரு கர்மா.
- ஸ்ராத்தம்.
- கயா ஸ்ராத்தம்.
- தர்பையின் முக்கியத்துவம்.
- ஆரிய-திராவிட இனவாதம்.
- ஆச்சார அனுஷ்டானங்கள் பற்றி நூற்றுக்கணக்கான கேள்வி-பதில்கள்.

# வேதமும் பண்பாடும்

வேத வைபவம், ஆசார அனுஷ்டானங்கள்
மற்றும் நமது கலாசாரம்

**காஞ்சி காமகோடி ஆச்சாரியாளின் ஸ்ரீமுகத்திலிருந்து ஒரு பகுதி:**

"......ஸ்ரீமடத்தின் பிரிய சிஷ்யர் ஸ்ரீ சர்மா சாஸ்திரிகள் வேதத்தை பற்றியும் கலாசாரத்தை பற்றியும், வைதீக தர்மத்தை பற்றியும் பல நூல்கள் தமிழில் எழுதி வெளியிட்டுள்ளார். அவரது ஆங்கில நூலான The Great Hindu Tradition பல பதிப்புகளை கண்டு மிக பிரபலமடைந்த விஷயம் எல்லோரும் அறிந்ததே. ஆங்கிலத்தில் இந்த நூல் ஒரு கலை களஞ்சியமாகவே அமைந்து பலரின் வரவேற்பையும் பெற்றுள்ளது. இந்த ஆங்கில நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு "வேதமும், பண்பாடும்" என்ற தலைப்பில் வருவது அறிந்து மகிழ்கிறோம். அனைவருக்கும் நன்மை பயக்கும் நோக்கில் அமைந்துள்ள அவரது தொடர்ச்சியான சுயநலமற்ற சேவையை தொய்வின்றி தொடர ஆசீர்வதிக்கிறோம்."

**மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்:**
ஸ்ரீசர்மா சாஸ்திரிகள், Ph: 94443 80973, email: sarmasasthrigal@gmail.com